[7th December 1961

SRI A. A. RASHEED: May I know whether there are any women prisoners for some time. If there are women prisoners they would accommodated in the small cell.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Yes. There are three cells, two big and one small cell in this sub-jail. There were women prisoners for some time. If there are women prisoners they would be accommodated in the small cell.

*Tobacco licensing rules*

*2127 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது சர்க்காரால் கொண்டுவரப்பட்டுள்ள பீடித் தொழிற்சாலைச் சட்டத்தை மத்திய சர்க்காரைச் சார்ந்த எக்சைஸ் டிபார்ட்மெண்ட் புகையிலை லைசென்சுமுறை சீர்குலைக்கும் போக்கிலுள்ளதா?

(இ) அதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) & (இ) ஆம், ஐயா. இதற்காக எக்சைஸ் இலாகாவில் லைசென்சு முறைகளை தக்கவாறு மாற்றமுடியுமாவென்று மத்திய சர்க்காருடன் ஆலோசிக்கப்பட்டது. ஆனால் இதற்கிடையில் பீடி முதலாளிகள் தொழில் கமிஷனர் முன் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி, சென்னை பீடிச் சட்டத்தின்கீழ் லைசென்சுகள் வாங்க ஒப்புக் கொண்டனர். அதனால் மேற்சொன்ன ஆலோசனை ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN: மத்திய சர்க்கார் புகையிலை லைசென்ஸ் கொடுக்கக்கூடிய நிலைமை இருப்பதனால், ராஜ்ய சர்க்காரின் சட்டத்தை மதிக்காத அளவிற்கு யார் பேரில் வேண்டுமானலும் லைசென்ஸ் கொடுக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகையால் ராஜ்ய சர்க்காரை மதிக்கக்கூடிய அளவிற்கு அந்தச் சட்டத்தை மாற்றி அமைக்க உடனடியாக ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மத்திய சர்க்கார் செய்த சட்டத்தை மாற்றுவதென்றால் பேசிதான் முடிவு செய்ய வேண்டும். மற்றபடி உடனடியாக மாற்றுவதற்கில்லை.

SRI V. K. KOTHANDARAMAN: இந்தச் சட்டத்தை மெட்ராஸ் வரையில் நமது ராஜ்ய சர்க்கார் பீடி தொழிலாளர்கள் சட்டத்தின்கீழ் லைசென்ஸ் வாங்கினவர்களுக்கு புகையிலை லைசென்ஸ் கொடுக்கவேண்டும் என்று மத்திய சர்க்காரின் அனுமதி பெறமுடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அவ்வாறு பெற முடியும் என்று சொல்வதற்கில்லை.